சிவமயம்

# திருவுசாத்தானக் கல் வெட்டுக்கள்

## ஆராய்ச்சிக் கட்டுரை



குத்தாலம்
வித்துவான் வை. சுந்தரேச வாண்டையார் அவர்களால்
எழுதப்பெற்றது



ஸ்ரீவைகுண்டம் வழக்கறிஞர்
திரு. T. M. குமரகுருபரன் பிள்ளை B.A., B.L. அவர்களால்
வெளியிடப்பெற்றது

 1949 [விலை அணா

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம்

3ர் திருமுறை திருவுசாத்தானம் பண்—கொல்லி

நீரிடைத் துயின்றவன் றம்பிநீள் சாம்புவான்
போருடைச் சுக்கிரீ வன்னநு மான்றொழக்
காருடை நஞ்சுண்டு காத்தருள் செய்தவெம்
சீருடைச் சேடர்வாழ் திருவுசாத் தானமே ௧

கொல்லையேறுடையவன் கோவண வாடையன்
பல்லையார் படுதலைப் பலிகொளும் பரமனார்
முல்லையார் புறவணி முதுபதி நறைகமழ்
தில்லையா னுறைவிடந் திருவுசாத் தானமே ௨

தாமலார் போலவே தக்கனார் வேள்வியை
ஊமனார் தங்கனா வாக்கினா னொருநொடிக்
காமனார் உடல்கெடக் காய்ந்தவெங் கண்ணுதல்
சேமமா வுறைவிடந் திருவுசாத் தானமே ௩

மறிதரு கரத்தினான் மால்விடை யேறியான்
குறிதரு கோலநற் குணத்தினா ரடிதொழ
நெறிதரு வேதியர் நித்தலு நியமஞ்செய்
செறிதரு பொழிலணி திருவுசாத் தானமே ௪

௫ ௬

பண்டிரைத் தயனுமா லும்பல பத்தர்கள்
தொண்டிரைத் தும்மலர் தூவித்தோத் திரஞ்சொலக்
கொண்டிரைக் கொடியொடுங் குருகினி னல்லினம்
தெண்டிரைக் கழனிசூழ் திருவுசாத் தானமே ௭

மடவரல் பங்கினன் மலைதனை மதியாது
சடசட வெடுத்தவன் தலைபத்து நெரிதர
அடர்தர வூன்றியங் கேயவற் கருள்செய்தான்
திடமென வுறைவிடந் திருவுசாத் தானமே ௮

ஆணலார் பெண்ணலா ரயனொடு மாலுக்கும்
காணொணா வண்ணத்தான் கருதுவார் மனத்துளான்
பேணுவார் பிணியொடும் பிறப்பறுப் பானிடம்
சேணுலா மாளிகைத் திருவுசாத் தானமே ௯

கானமார் வாழ்க்கையன் காரமண் டேரர்சொல்
ஊனமாக் கொண்டுநீ ருரைமினுய் யவெனில்
வானமார் மதிலணி மாளிகை வளர்பொழில்
தேனமா மதியந்தோய் திருவுசாத் தானமே ௧௦

வரைதிரிந் திழியுநீர் வளவயற் புகலிமன்
திரைதிரிந் தெறிகடற் றிருவுசாத் தானரை
உரைதெரிந் துணருஞ்சம் பந்தனொண் டமிழ்வல்லார்
நரைதிரை யின்றியே நன்னெறி சேர்வரே ௧௧

திருச்சிற்றம்பலம்.

---

உ

செந்திலாண்டவன் துணை

# முகவுரை

தமிழ் நாட்டு வரலாற்றை அறிதற்குச் சிறந்த கருவியாயுள்ளவை பண்டையரசரது கல்வெட்டுக்களேயாம். அக்கல்வெட்டுக்களைப் படித்து வரலாற்று முறையறிந்து கல்வெட்டுக்களில் கண்ட விஷயத்தை நன்கு எடுத்துரைக்கும் ஆற்றல் வாய்ந்த புலவருள் வித்துவான் திரு வை. சுந்தரேச வாண்டையார் ஒருவர் ஆவர். அவர் எழுதிய கல்வெட்டாராய்ச்சிக் கட்டுரைகள் பல. அம்முறையிலேயே எழுதப்பட்டது "திரு உசாத்தானத் திருக்கோயில் கல்வெட்டுக்கள்" என்னும் ஆராய்ச்சிக் கட்டுரை. இதனை எழுதுவதற்கும், இச்சிறு நூல்வடிவில் வெளிவரற்கும் பொருள் உதவி புருந்தருளியவர்கள் பெருங்கொடையாளர்கள் ஆகிய திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் ஆவர். ஸ்ரீ-ல-ஸ்ரீ சுவாமிகள் அவர்கள் பட்டத்துக்கு எழுந்தருளியது முதற்கொண்டு தென் குமரி வட விமயம் வரையுள்ள பல சிறந்த நகரங்களில் சைவசித்தாந்த வளர்ச்சிக்காக ரூ. 1,40,000, அன்னதானத்துக்காக 7,26,500, தேவார திருமுறைகளை மாணவர்கள் கற்க ரூ. 64,000, பொதுநன்மைக்காக ரூ. 52,400, ஜன வைத்தியசாலை நிறுவ ரூ. 87,000, கால்நடை வைத்திய சாலை நிறுவ ரூ. 20,000, பசுப் பரிசுக்கு ரூ. 1000 இவ்வாறு மூலதனங்கள் ஏற்படுத்தி, உரிய சாஸன பத்திரங்களும் அமைத்துப் பதிவு செய்து யாவரும் பயன்பெறும்படி மிகவும் திருத்தமாக நடத்திவருகிறார்கள். அன்றியும் கல்வெட்டாராய்ச்சியை ஊக்கும் பொருட்டு இந்நூலை எழுதி அச்சிடுவதற்கும் பொருள் உதவி புரிந்ததோடு, இது

போன்றுபலதுறைகளிலும் உதவிகள் புரிந்துவரும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் பல்லாண்டு வாழ்ந்து விளங்குக என ஸ்ரீ செந்திலாண்டவன் திருவடிமலர்களை வந்தித்து வாழ்த்துகிறேன்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பரம்பரையில் பிறத்தற்கு நல்லூழ் பொருந்தியவரும், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளிடத்து இடையறாப் பேரன்புபூண்டவரும், ஸ்ரீ வைகுண்டத்தில் உள்ள ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடாலயத்தின் பொறுப்பை ஏற்றுச் சிறப்புறத் தொண்டுகள் பல புரிந்துவருபவரும், சிறந்த நற்குண சீலரும், ஸ்ரீ வைகுண்டம் வழக்குரைஞருமாகிய திரு. T. M. குமரகுருபரன் பிள்ளை அவர்கள் B.A., B.L., இந்நூலை வெளியிட்டுள்ளார்கள். அவர்கட்கு என் நன்றியுரியதாகுக.

இங்ஙனம்.

செந்தமிழ்க் கல்லூரி,
திருப்பனந்தாள்,
18—9—49.

வித்துவான்
கே. எம். வேங்கடராமையா, M.A., B.O.L.,
Principal.

---

உ

செந்திலாண்டவன் துணை

# முன்னுரை

திருவுசாத்தானம் என்பது சிவநெறிக்குரவராகிய திருஞான சம்பந்தப் பெருந்தகையாரால் பாடப்பெற்ற பழமையும் பெருமையும் வாய்ந்த பதியாகும். இது தஞ்சாவூர்ச் சில்லாவில் திருவாரூரிலிருந்து அறந்தாங்கிக்குப் போகும் இருப்புப்பாதையில் உள்ள முத்துப்பேட்டை இரயில்வே நிலையத்திற்கு வடக்கே சுமார் ஒன்றரை மைல் தூரத்தில் இருக்கிறது.

கோயில் ஊரின் நடுவே கிழக்கு நோக்கியிருக்கிறது. இதற்கு இரண்டு திருச்சுற்றுலேகள் (பிராகாரங்கள்) இருக்கின்றன. முதல் திருச்சுற்றுலேயில் கருப்பஇல் (Central shrine) அர்த்தமண்டபம். மகாமண்டபம், கூத்தப்பெருமான் மண்டபம் இவைகள் இருக்கின்றன. இம்முதல் திருச்சுற்றுலேயைச் சுற்றிலும் திருச்சுற்று மாளிகைகள் அல்லது திருநடன மாளிகைகள் இருக்கின்றன, இம்முதல் திருச்சுற்றுலேயின் கிழக்குப் பக்கத்தில் மூன்று நிலேகளுடன் கூடிய கோபுரம் வாயிலே அழகுபடுத்துகின்றது. இம்முதல் திருச்சுற்றுமாளிகை 1943 ஜூன் மாதத்தில் நடந்த கும்பாபிஷேகத்திற்கு முன் செங்கல் திருப்பணியாய் இருந்து பழுதுற்றிருந்ததென்றும், அது இடிக்கப்பெற்றுக் கல்லால் (கருங்கல்லால்) கட்டப்பட்டதென்றும் அவ்வூர் முதியோர் கூறுகின்றனர்.

இரண்டாம் திருச்சுற்றுலேயில் திருக்காமகோட்டம், திருமடைப்பள்ளி, திருக்குளம் இவைகள் இருக்கின்றன. இத்திருக்காமகோட்டம் (அம்மன்கோயில்) முன்னிருந்ததை முற்றிலும் இடித்துவிட்டுப் புதிதாகக் கட்டி 1943ல் கும்பாபிடேகம் செய்யப்பெற்றதாகும். இந்த இரண்டாம் திருச்சுற்றுலேயின் கிழக்குப் பக்கத்தில் ஐந்து நிலேகளுடன் கூடிய கோபுரம் ஒன்று இருக்கின்றது. இப்பதிக்குரிய மரம் (தலவிருட்சம்) மாமரமாகும். அது இரண்டாம் திருச்சுற்றுலேக்குள் தென்மேற்குப் பக்கத்தில் இருக்கிறது.

இக்கோயில் அர்த்தமண்டபத்தின் வாசலடியில் வாயில் காவ ல்ாளர்கள் இருவர்களின் கருங்கல் உருவங்கள் இருக்கின்றன. அவைகள் ஒவ்வொன்றிற்கும் நான்கு நான்கு கைகள் இருக் கின்றன. கருப்ப இல்லின் பின்பக்கத்து நடுப்பகுதியில் இலிங் கோற்பவமூர்த்தி இருக்கின்றது. இவைகளினுல் இக்கோயில் சோழமன்னர் காலத்தின் திருப்பணிக்குரியது என்று பெறப் படுகின்றது.

இக்கோயிலில் முதல் கோபுரம், இரண்டாங் கோபுரம், மகா மண்டபம், அர்த்த மண்டபம் இவைகளில் கல்வெட்டுக்கள் காணப் படுகின்றன. 1943 கும்பாபிடேகத்திற்கு முன் திருப்பணியின் பொருட்டு இடிக்கப்பட்ட கருங்கற்கள், ஊரின் கிழக்கேயுள்ள குளக் கரைகளில் பரப்பப்பட்டுக் கிடக்கின்றன. அவைகளுள்ளும் கல் வெட்டுக்கள் இருக்கின்றன. இவைகளேயன்றி ஊரின் வடக்கே யுள்ள ஒரு குளத்தில் துவைப்பதற்காகப் போடப்பட்டிருக்கும் ஒரு துண்டு கல்லிலும் கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

9—1—49இல் யான் இத்திருக்கோயிலுக்குச்சென்றிருந்தேன் அன்று இவ்வூர் கோயிலூர் என்று வழங்கப்பெறுவதற்குக் கல் வெட்டில் ஏதேனும் ஆதாரம் கிடைக்குமா என்பதை ஆய்வதில் என் கருத்துச் சென்றது. சில கல்வெட்டுக்களைப் படித்துப்பார்த் தேன். ஆதாரம் கிடைத்திலது. ஒழிவுள்ள காலங்களில் எல்லாக் கல்வெட்டுக்களையும் படித்தறிய ஆவல் உடையவனய் இருந்தேன். இந்நிலையில் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தார் இக்கோயில் கல் வெட்டுக்களைப்பற்றி சுதேசமித்திரனில் வெளியிட்டிருந்த அறிக்கை எனக்குப் பெரிதும் ஊக்கத்தை அளித்தது.

அரசியலார் இக்கோயில் கல்வெட்டுக்களை எல்லாம் படியெடு த்து, அவைகளின் சுருக்கங்களை 1908ஆம் ஆண்டு அறிக்கையில் வெயிட்டுள்ளனர். (See the list of Inscriptions copied by the office of the Superintendent for Epigraphy Madras compiled upto 31st March 1938).

அந்த ஆண்டு அறிக்கையைப் படித்துப் பார்ப்பதற்காகக் கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சாவூர் சரஸ்வதி மஹால், குடந்தை அரசியலார் கல்லூரியின் நூல் நிலையம் ஆகிய இவ்விடங்கட்குச் சென்று பார்த்தேன். அவ்வறிக்கை கிடைத்திலது. ஆதலின் அக்கோயிலில் உள்ள எல்லாக் கல்வெட்டுக்களையும் படித்து எழுதி விடுவதே நலமென்று எண்ணினேன். பின் 14—3—49, 15-3-49, 12-4-49, 18—4—49 இந்நாட்களில் அவைகளைப் படித்து எழுதிக் கொண்டேன். எனது மாணவ நண்பர்கள் வேண்டும் உதவிகளை எல்லாம் குறைவறச் செய்தனர். அக்கல்வெட்டுக்களுள் பல அரிய செய்திகள் காணக்கிடக்கின்றன. அவைகள் தமிழ் நாட்டின் வரலாற்றிற்குப் பெரிதும் பயன் அளிப்பனவாகும். அவைகளை விரைந்து படித்துக் கட்டுரை வடிவில் எழுதுதற்குக் காரணமாய் இருந்தது திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தாரின் அறிக்கையே யாகும். இவ்வாறு அறிக்கை விடுவித்த திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து அதிபர் **ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்** அவர்களுக்கு நன்றிசெலுத்தும் கடப்பாடுடையேன். இம்முயற்சியில் என்னைப் புகுத்திய ஸ்ரீசெந்திலாண்டவன் சேவடிகளைப் பன்முறையும் வணங்குகின்றேன்.

இங்ஙனம்,

வை. சுந்தரேச வாண்டையார்.

---

செந்திலாண்டவன் துணை

# கோயிலூர் என்று வழங்கப்பெறும் திருவுசாத்தானக் கல்வெட்டுக்கள்

## கல்வெட்டும் சரித்திரமும்

இத்திருக்கோவிலில் சோழமன்னர்களில் விக்கிரமசோழ தேவர் மூன்றுங்குலோத்துங்க சோழதேவர், மூன்றும் இராசராசதேவர், மூன்றும் இராசேந்திர சோழதேவர் ஆகியோர் காலங்களின் கல்வெட்டுக்களும், பாண்டியரில் பெருமாள் சுந்தரபாண்டிய தேவர் காலத்துக் கல்வெட்டுக்களும் இருக்கின்றன. இவைகள் எல்லாவற்றிலும் இவ்வூர், இராசேந்திர சோழவள நாட்டுப் புறங்கரம்பை நாட்டு உசாத்தானமான கேரளகுலாசனி சதுர்ப்பேதிமங்கலம் என்று குறிக்கப் பெற்றுள்ளது.

## இராசேந்திர சோழவளநாடு

சோழமண்டலம், முதலாம் இராசராசன் காலத்தில் (கி.பி. 985—1014) பல வளநாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றுள் அருமொழிதேவ வளநாடு என்பது ஒன்றாகும். அது தென்கடுவாயான அருமொழி தேவவளநாடு என்றும் வழங்கப் பெற்றுவந்தது. * அது அளநாடு, ஆர்வலக்கூற்றம், இடையளநாடு, இங்காநாடு, மங்கலநாடு, நென்மலிநாடு, புலியூர்நாடு, புறங்கரம்பைநாடு, தக்களூர்நாடு, வலிவலக்கூற்றம், வெண்

* South Indian Inscriptions Vol II Part I Page 43.
தென்கடுவாயான அருமொழிதேவவளநாட்டு இங்கணாட்டுப் பாலையூர்.

டாழை வேளூர்க்கூற்றம் என்னும் § பதினெரு பிரிவுகளை உடையதாய் இருந்தது. முதலாம் இராசராசன் காலம்முதல், அதிராசேந்திரன் காலம்முடிய அதற்கு அப்பெயரே வழங்கி வந்தது. அதிராசேந்திரனுக்குப் பின் பட்டமெய்திய முதற் குலோத்துங்க சோழன் காலத்தில் (கி. பி. 1070—1120) அந்த அருமொழிதேவ வளநாடு இராசேந்திரசோழ வளநாடு என்னும் பெயர் எய்திற்று. இராசேந்திரன் என்பது முதற் குலோத்துங்கசோழனின் வேறு பெயர் ஆதலின் அப்பெயரே அவ்வள நாட்டிற்கும் வைக்கப்பெற்றுள்ளது. இம்முதற் குலோத்துங்கனுக்குப் பின் ஆட்சி செய்த சோழமன்னர்கள் பாண்டியர்கள் இவர்களின் காலங்களிலும் அவ்வளநாட்டிற்கு அப்பெயரே வழங்கிவந்துள்ளது. இக்காலம் தஞ்சாவூர்ச் சில்லாவில் அறந்தாங்கி தாலூகா, பட்டுக்கோட்டைத் தாலூகா திருத்துறைப்பூண்டி தாலூகா, நாகப்பட்டினம் தாலூகா இவை களில் பல பகுதிகளைக் கொண்டது இவ்வளநாடாகும்.

## புறங்கரம்பை நாடு

இது அருமொழிதேவ வளநாட்டின் பதினெரு பிரிவு களில் ஒன்றாகும். பல்லவன்மாதேவி சதுர்வேதி மங்கலம், செம்பியன்மாதேவி சதுர்வேதிமங்கலம், பெரும்பலமருதூர், களப்பாழ், சிங்களாந்தகச் சதுர்வேதிமங்கலம், கெழுவத்தூர், பனையூர், வன்கொற்றங்குடி, பெருவாழ்வுதந்த பெருமான் சதுர்வேதிமங்கலம், மும்முடி சோழபுரம் என்பவைகள் இந் நாட்டில் அடங்கிய சில ஊர்கள் என்று கல்வெட்டுக்கள் அறி விக்கின்றன. இவற்றுள் களப்பாழ், பெருவாழ்வுதந்த பெரு மான் சதுர்வேதிமங்கலம் என்னும் ஊர்கள் மன்னார்குடி தாலூ காவில் களப்பாள், பெருகவாழ்ந்தான் என்னும் பெயர்களுடன்

§ S. I. I. Vol. II Part V Introduction page 22.

இக்காலம் மக்களால் வழங்கப்பட்டுவருகின்றன. அருமொழி தேவவளநாட்டின் பெயர் முதற் குலோத்துங்கன் காலத்தில் மாற்றப்பட்டு, இராசேந்திர சோழவளநாடு என்னும் பெயர் வைக்கப்பெற்றிருந்தாலும், அவ்வருமொழிதேவ வளநாட்டின் உட்பிரிவுகளாகிய பதினொரு நாடுகளின் பெயர்கள் மாற்றப் படவில்லை என்பது ஈண்டு அறியத்தக்கது.

## உசாத்தானம்

இலக்கியத்திலும் கல்வெட்டிலும் வழங்கிவரும் இவ்வூரின் பெயர் திருவுசாத்தானம் என்பதாகும். சிறுபான்மை கல வெட்டுக்களில் உசாத்தானம் என்பது சாக்கானம் என்று மருவி வழங்கப்பெற்று வந்துள்ளது.

## கேரள குலாசனி சதிர்ப்பேதிமங்கலம்

சதுர்ப்பேதிமங்கலம் என்பது சில சிற்றூர்களைத் தன் கண் கொண்டதாகும். இத்தொடர் சதுர்வேதிமங்கலம், சருப் பேதிமங்கலம் என்றும் கல்வட்வெட்டுக்களில் வழங்கப் பெறும். தனி ஊரும் சதுர்ப்பேதிமங்கலமாக இருக்கும். இச் செய்தியைத் "தனியூர் உக்கலாகிய விக்கிரமாபரணச் சதுர் வேதிமங்கலம்"—என்னும் கல்வெட்டுப் பகுதி புலப்படுத்தும் (S. I. I. Vol. III, Part I, page 7).

அம்முறையில் இது தனியூர் என்று குறிப்பிடப் பெறு மையால் சில சிற்றூர்களைக்கொண்டதாகும். கேரளகுலாசனி என்னும் தொடர் சேரர்குலத்துக்கு இடியை ஒத்தவன் என்று பொருள்படும். இப்பெயர் இக்கோவிலில் உள்ள விக்கிரமசோழ தேவரின் கல்வெட்டில்தான் முதன் முதல் காணப்பெறுகின்றது. எனவே கேரளகுலாசனி என்பது விக்கிரமசோழ தேவரின் விருதுப் பெயர்களில் ஒன்றாகும்.

அப்பெயரையே இச்சதுர்ப்பேதி மங்கலத்துக்கு இடப்பெற் பெற்றிருக்கவேண்டும்.

## கோயிலூர் என்னும் பெயர் ஏற்பட்டகாலம்

திருவுசாத்தானம் என்பது இவ்வூரின் பழம் பெயராய் இருப்பினும், மக்கள் இதைக் கோயிலூர் என்றே வழங்கு கின்றனர். இவ்வாறு வழங்கப்பெறுவதற்குக் கல்வெட்டுகளில் ஆதாரம் கிடைத்திலது. முதலாம் இராசராச சோழரின் இருபத்தொன்பதாம் ஆண்டுவரை பொறிக்கப்பெற்றுள்ள கல் வெட்டு ஒன்று தஞ்சை இராசராசேச்சுரத்தில் இருக்கின்றது. அதில் காணப்பெறும், "இந்நாட்டு (புறங்கரம்பை நாட்டுக்) கோயிலூர் புதுக்குடியாகிய கோதண்டராம சதுர்வேதிமங்கலத் துச் சபையார் இடக்கடவ திருப்பரிசாரகஞ் செய்யும் மாண் ஒன்று" என்னும் பகுதியால், (South Indian Inscriptions Volume II, Part III, Page 314) கி. பி. 1014க்கு முன்னரே கோயிலூர் என்னும் பெயர் இவ்வுசாத்தானத்துக்கு வழங்கப்பெற்று வந்தது என்பது புலனாகிறது.

குறிப்பு :—சில ஆண்டுகளுக்கு முன் திருவாளர்களான கந்தசாமியார், சர்க்கரை இராமசாமிப் புலவர் இவர்களுடன், (சிதம்பரம் ஞானப்பிரகாசக் குளத்தின் கீழ்க்கரையில் திரு. கந்தசாமியார் வதிந்த இல்லத்தில்) யான் அளவளாவியிருந்த காலே, நடராசப்பெருமான் விரும்பி எழுந்தருளியிருக்கும் தல மாதல்பற்றிக் கோயிலூர் என்று பெயர் ஏற்பட்டிருக்கவேண்டு மென்றும், அதற்கு உசாத்தானப் பதிகத்தில் குறிப்பு உள் ளது என்றும் திரு. சர்க்கரைப் புலவர் அவர்கள் கூறினர்கள்.

## இறைவன் திருப்பெயர்

இவ்வூர்க் கல்வெட்டுக்களில் சிவபெருமான் திருவுசாத் தானமுடைய நாயனார், திருவுசாத்தானமுடையார் என்னும் பெயரால் அழைக்கப்பெறுகிறார்.

## இறைவியாரின் திருப்பெயர்

இறைவியாரின் திருப்பெயர் பெரிய நாச்சியார் என்ப தாகும். இச் செய்தி "பிள்ளை புரோசைக்குடையார் சாக் கானமான கேரளகுலாசனி சதுர்ப்பேதிமங்கலத்து உடையார் திருவுசாத்தானமுடைய நாயனர் கோயிலில் எழுந்தருளுவித்த திருக்காம கோட்டமுடைய பெரிய நாச்சியாருக்கு அமுது படிக்கும் சாத்துபடிக்கும் உடலாக திருக்கைமலரில் நீர் வார்த்துக்கொடுத்த நிலமாவது"—என்னும் திரிபுவனச் சக்கர வர்த்தி இராசராச தேவரின் இருபதாம் ஆண்டில் பொறிக்கப் பெற்ற கலவெட்டுப் பகுதியால் அறியக்கிடக்கின்றது. மேலும் இவ்விறைவியாரை எழுந்தருளுவித்தவர் பிள்ளை புரோசைக் குடையார் என்றும் பெறப்படுகின்றது. இங்குப் பிள்ளை என்பது அரசிளங்குமாரனைக் குறிப்பதாகும். திருக்காம கோட்டம் என்பது அம்மன் கோயிலாகும். இங்குக் குறித்த புரோசைக்குடையார் மூன்றும் இராசராச சோழனின் இரண் டாவது மகனுவர். இக்கல்வெட்டு இருக்குமிடம் மகாமண்ட பத்தின் வடபுறமாகும்.

## இறைவன் கோயிலில் ஒரு பகுதியைத் திருப்பணி செய்வித்தவர்கள்

எழுபத்தொன்பது நாட்டு, பதினெண் பூமிகாரரான கற்பகப்பிள்ளையார் இக் கோவிலில் சில திருப்பணிகளைச் செய் துள்ளார். இதைத் திரிபுவனச் சக்கரவர்த்தி இராசேந்திர சோழ தேவரின் நான்காம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பெற் றுள்ள "இராசேந்திர சோழவளநாட்டு புறங்கரம்பை நாட்டு பிரமதேச முசாக்கானமான கேரளகுலாசனி சருப்பேதிமங்க லத்து உடையார் திருவுசாத்தானமுடையார் கோயில் தேவ தானக்குடிமக்களோம். இன்னயனர் கோயில் திருப்பணி

செய்கிற எங்கள் பிள்ளை இரா.......மனு தேவ முதலியாரான எழுபத்தொன்பது நாட்டு பதினெண் பூமி காரரான கற்பகப் பிள்ளையார்க்கு நாங்கள் வைத்துக்கொடுத்த ந. இவற்காக திருப்பணி கங்காணியுமாய் முதலிகளுக்கு அடிகீழுமாய் நிற்கிற விளக்கொளி மங்கலமுடையார் திருமாளிகைப் பிள்ளைக்கு சிவனத்துக்கு உடலாக வைத்துக்கொடுத்த பரிசாவது" என்னும் கல்வெட்டுப் பகுதி அறிவிக்கின்றது. (இக்கல்வெட்டு அர்த்தமண்டபத்தின் தென்புறச் சுவரில் தீட்டப்பட்டிருக்கின்றது) மேலும், இக்கல்வெட்டுப் பகுதியால் கற்பகப்பிள்ளையாரின் திருப்பணி கங்காணியாய் விளங்கியவர் திருமாளிகைப் பிள்ளை என்றும் புலப்படுகின்றது.

மேற்குறித்த கற்பகப் பிள்ளையாரே யன்றி, ஆண்டார் பிரசன்ன தேவர் என்பவரும் சில திருப்பணிகளைப் புரிந்துள்ளனர். இச் செய்தி, திரிபுவனச் சக்கரவர்த்தி இராசேந்திர சோழ தேவரின் பத்தாம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பெற்றுள்ள "நம்மூர் கணக்கு சாக்கானமுடையான் தம்மப் பிரியன் உள்ளிட்டார் கண்டு நம்மூருடையார் திருவுசாத்தானமுடையார் கோயில் திருப்பணி செய்வித்த ஆண்டார் பிரசன்ன தேவற்கு மடசேஷமாக பன்னிரண்டாந்தபத்து இறுப்பாக இட்ட ஊரில்"—என்னும் கல்வெட்டுப் பகுதியால் அறியக் கிடக்கின்றது. இது மகாமண்டபத்தின் தென்புறச் சுவரின் கல்வெட்டு.

## இராசராச தேவர்காலத்தில் எழுந்தருளிவிக்கப் பெற்ற சில திருமேனிகள்

திரிபுவனச் சக்கரவர்த்தி இராசராசதேவரின் முப்பதாம் ஆட்சியாண்டில் கன்றுப்புடையார் இக்கோயில் மேலைத் திரு

நடை மாளிகையில் சுப்பிரமணியப் பிள்ளையாரை எழுந்தருளு வித்துள்ளார் (மகாமண்டபத்தின் வடபுறச்சுவர்க் கல்வெட்டு).

இம்மன்னது எட்டாம் ஆட்சியாண்டில் பைய்யூர் நாட்டுப் பைய்யுழான் பிச்சன் பல்லவராயனான சோழியவரையன் இக் கோவில் மேலைத் திருநடை மாளிகையில் பல்லவனீஸ்வர முடையாரை ஆசிரியலிங்கமாக எழுந்தருளிவித்த செய்தியை ஒரு கல்வெட்டுக் கூறுகின்றது. இவ்வரசனின் பதினொன்று மூப்பத்தொன்று ஆட்சியாண்டுக் கல்வெட்டுக்கள் இக்கோயில் கீழைத் திருநடைமாளிகையில் வடபாரிசத்தில் சூரிய தேவர் எழுந்தருளியிருக்கும் செய்தியைக் குறிப்பிடுகின்றன.

## இராசேந்திரசோழ தேவர்காலத்தில் எழுந்தருளுவிக்கப்பெற்ற திருமேனிகளும் பிரதிமங்களும் *

திரிபுவனச் சக்கரவர்த்தி இராசேந்திரசோழ தேவரின் நான்காம் ஆட்சியாண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டொன்று இக்கோயில் மேலைத் திருநடைமாளிகையில் களரிக்குடையான் பொன்னம்பலக் கூத்தனான இருமுடி சோழ பல்லவரையன் புவனபதி நாச்சியாரை எழுந்தருளுவிக்கப்பெற்றதைக் கூறு கின்றது. இம்மன்னது காலத்து மற்றொரு கல்வெட்டு, மேற் குறித்த அந்த நாச்சியாரை, பூக்கைக்கொண்டு அருளுகிற புவனபதி நாச்சியார் என்றும் குறிப்பிடுகின்றது.

மும்முடி சோழபுரத்து வியாபாரிகளில் செம்பங்குடை யான் திருச்சிற்றம்பலமுடையான் கூத்தாடு நாயனார் இக்

---

* கோயிலில் எழுந்தருளிவித்த கடவுள் வடிவங்கட்குத் திரு மேனிகள் என்றும், மக்கள் வடிவங்களுக்குப் பிரதிமம் என்றும் பெயர்கள் வழங்கிவந்துள்ளன.

கோயிலில் திருஞானம்பெற்ற பிள்ளையை எழுந்தருளிவித்த செய்தியை, திருபுவனச் சக்கரவர்த்தி இராசேந்திரசோழ தேவரின் இருபத்துமூன்றும் ஆட்சியாண்டுக் கல்வெட்டு அறிவிக்கின்றது. இம்மன்னனின் ஒன்பதாவதின் எதிராமாண்டு அதாவது பத்தாம் ஆட்சியாண்டில் தீட்டப்பெற்றிருக்கும் "இந்நாயனர் கோயில் தெற்கில் திருநடைமாளிகையில் எழுந்தருளியிருந்து பூசை கொண்டருளுகிற பிள்ளை நயனாற்கும் திருநாவுக்கரசு நாயனாற்கும், சுந்தர நயனாற்கும் திருவமுது படிக்கு உடலாக"—என்னும் கல்வெட்டுப் பகுதியால் இக்கோயிலில் முன்னரே திருஞானசம்பந்தப் பெருமானை எழுந்தருளுவிக்கப்பெற்ற செய்தி பெறப்படுகின்றது. எனவே இதற்குப் பின்னரே செம்பங்குடையான் திருச்சிற்றம்பலமுடையான் கூத்தாடு நாயனர் மற்றொரு ஞானசம்பந்தப் பெருமானின் பிரதிமத்தை எழுந்தருளச் செய்துள்ளான். இன்றும் தெற்குத் திருநடைமாளிகையில் ஞானசம்பந்தப் பெருமானின் இரண்டு பிரதிமங்களைக் காணலாம். (பிள்ளை நாயனர் என்பது ஞானசம்பந்தப் பெருந்தகையாரைக் குறிக்கும்).

## பண்டைய வழக்கம்

அரசனுடைய திருமேனி கல்யாண திருமேனியாகுமாறும், அவருடைய பிள்ளைக்கு வெற்றியுண்டாகுமாறும், ஊர்ச்சபையார் கடவுளுக்குத் திருநாமத்துக்காணியும் இறையிலியுமாக நிலம் கொடுப்பது வழக்கம். இச் செய்தி "ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ இராஜராஜ தேவற்கு யாண்டு இருபதாவது மகர நாயற்று பூர்வ பக்கத்து ஸப்தமியும் திங்கள்கிழமையும் பெற்ற அஸ்வதிநாள் இராசேந்திர சோழ வளநாட்டு புறங்கரம்பை நாட்டு அகரம் பெருவாழ்வு வந்த பெருமான் சதுர்ப்பேதிமங்கலத்து பெருங்குறி மஹா

சபையார் எழுத்து. நம்மூர் கணக்கு மஹா ஜனப்பிரியனும் தம்மப்பிரியனும் கண்டு பெருமாள் திருமேனி கல்லியாண திருமேனியாகவும், பிள்ளை இருங்கோளற்கு விஜையாத்த மாகவும், பிள்ளை புரோசைக்குடையார் சாக்கானமான கோள குலாசனிச் சருப்பேதிமங்கலத்து உடையார் திருவுசாத்தான முடைய நாயனுர் கோயிலில் எழுந்தருளுவித்த திருக்காம கோட்டமுடைய பெரிய நாச்சியார்க்கும் அமுதுபடிக்கும் சாத்துபடிக்கும் உடலாக திருக்கை மலரில் நீர் வார்த்துக் கொடுத்த நிலமாவது''—என்னும் கல்வெட்டுப் பகுதியால் அறியக்கிடக்கின்றது. (இங்குக் குறிக்கப்பட்ட பெருமாள் என்பது அரசனையும், பிள்ளை என்பது அரசனது மகனையும் உணர்த்தும்).

குறிப்பு :—இக்கல்வெட்டு மகாமண்டபத்தின் வடபுறச் சுவரில் உள்ளது.

## மூன்ரும் இராசராசனுடைய பிள்ளைகள்

மேற்குறித்த கல்வெட்டுப் பகுதி, மூன்ரும் இராசராசனுக்கு இருங்கோளர், புரோசைக்குடையார் என்னும் இரண்டு பிள்ளைகள் இருந்தனர் என்ற செய்தியைப் புலப்படுத்துகின்றது.



## திருக்கை கொட்டி

இத்திருக்கோயிலில் திருமுறை ஓதுதற்கு ஒரு மண்டபம் இருந்ததென்றும், அதற்குத் திருக்கை கொட்டி இல்லம் என்று பெயர் என்றும், அவ்வில்லம் திருக்கை கோட்டி இல்லத் துறையார் கண்காணிப்பில் இருந்தது என்றும், திருக்கை கொட்டி ஓதுவாரை நிச்சயித்து ஓதுவார்களாகப் பண்ணுவதே அத்துறையாரது கடமையாகுமென்றும், அத்திருக்கை கொட்

டிக்கு அளிக்கப்பெறும் நிவந்தம் திருக்கைகோட்டிப் புறம் என்று பெயர் பெறும் என்றும் ஒரு கல் வெட்டு உணர்த்துகிறது. அக்கல்வெட்டுப் பின்வருமாறு:—“இராச கெம்பீர சோழிய வரயன் ஓலைக்கு எதிரிடையாக சொக்கனு யனு இராச கெம்பீர சோழிய வரையன் ஓலை. உடையார் திருவுசாத்தானமுடைய நாயனார் கோயில் தானத்தார்கண்டு இன்னாயனார் கோயில் திருக்கை கொட்டி இல்லத் துறையார் திருக்காப்பு நீக்கி ஓதுவாற்கு இறையிலியாக உசாத்தானமான கோளக் குலாசனி சருப்பேதி மங்கலத்து பிடாகை நம்பன் குறிச்சியில் இங்குத்தைக் காணியான நிலத்து ஈச்சங்குளத் துக்கு வடக்கு இன்னாயனார் தேவதானத்திற்கு மேற்கும் திடக்கை வடக்கும் சண்டேசுரப்பிச்சன் நிலத்துக்கு கிழக்கும் தேவதானத்து தெற்கும் நடுவுபட்ட நிலம் ஒருமா முந்திரி கைக் கீழ் முக்காலே காணியும் இங்குவிட்டு இறை குத்துவரை மடை வாய்க்காலுக்குத் தெற்கும் ஆண்டார் பிரசன்ன தேவர் நிலத்துக்கு மேற்கும் கலியாணபுரத்துக்குப் போகிற பெரு வழிக்கு வடக்கும் புற்றிலி குழிக்கும் தேவதானம் திருப் பள்ளி எழுச்சி நிலத்துக்கு தெற்கும் தடி இரண்டினால் நிலம் முக்காணி அரைக்காணி கீழ் மூன்று மாமுக்காணியும்ஆக ரு* உ[illegible] இந் நிலம் இரண்டு மாவும் இருபத்திரண்டாவது தை மாதம் முதல் இறையிலியாக இட்டது இந்நிலத்து தா மாடி மடக்குக் காணிப்பற்று முன்பு இறுத்துப் போதுகிற படியே கடமை குடிமை உள்ளிட்டன சந்திராதித் தவரையும் காணிப்பற்றுடனே கூட்டி இறுத்துக் குடுக்குமிடத்து இந் நிலம் இந்நாள் முதல் திருக்கை கொட்டிப்புறம் தேவத தானத் துடனே கூட கல்வெட்டிக் கொள்ளவும். திருக்கை கொட்டி ஓதுவார் அங்கிட்டு நிச்சயித்தார் ஓதுவார்களாகப் பண்ணுவதே

---

*இது நிலத்தைக் குறிக்கும் அடையாளமாகும்.

இப்படிக்கு இவை சொக்க நாயநாக இராச கம்பீர சோழிய வரயன் எழுத்து. இப்படிக்கு இவை வில்லவதரயன் எழுத்து.

குறிப்பு:—திருக்கை கொட்டி இல்லம் என்ற தொடர் திருக்கைக் கோட்டி இல்லம் என்றிருக்க வேண்டுமென்றும் அதற்குத் திருமுறை ஓதுதற்குரிய கோயில் மண்டபம் என்பது பொருளென்றும் சென்னைப் பல்கலைக் கழக அகராதியில் குறிப்பிடப் பெற்றிருக்கின்றது. [Tamil Lexicon Vol. III Part I Page 1899] மேல்கண்ட தொடரிலுள்ள கொட்டி என்ற இடத்துக் கொம்பை, கொம்பு சுழியாகக் கொண்டு கல்வெட்டில் படிக்கப் பெறுதலும் உண்டு. அதுவும் இடம் நோக்கியாகும். அம் முறையில் இங்குக் கொள்ளுதல் சால்புடைத்தா என்பதை அறிஞர்கள் துணிதல் வேண்டும். கைகொட்டி—என்பது கையைக் கொட்டி என்று விரியுமாதலால், திருக்கோலக்காவில், கையைக் கொட்டிப்பாடிய சம்பந்தரைக் குறிப்பதாகக் கொள்ளுதல் வேண்டும்).

## வைகாசித் திருநாள்

இத்திருக்கோயிலில் வைகாசி மாதத்தில் திருவிழா நடத்தப் பெற்று வந்த செய்தியை இராசேந்திர சோழ தேவரின் பத்தாவதின் எதிராமாண்டு அதாவது பதினொன்றும் ஆண்டுக் கல்வெட்டொன்று உணர்த்துகின்றது.

## பொதுச் செய்திகள்

1. "உசாத்தானமான கோளகுலாசனி சதுர்ப்பேதி மங்கலத்துக் கூட்டப் பெருமானடிகள் எழுத்து—

2. ஸ்ரீசுத்தவல்லி சதுர்வேதி மங்கலத்துக் கும்ப நாயறு முதல் ஸ்ரீ காரியம் செய்கிற கூட்டப் பெருமக்கள்

எழுத்து— (ஸ்ரீகாரியம் செய்கிற—கோயில் காரியங்களைச் செய்கிற)

3. அகரம் பெருவாழ்வுதந்த பெருமான் சதுர்ப்பேதி மங்கலத்து பெருங்குறி மஹா சபையார் எழுத்து—

1. இப்படியாலே சந்திராதித்தவரையும் செல்லக் கடவதாகப் பணித்தோம் — பணியால் ஊர்க்கணக்கு உசாக்கானமுடையான் உத்தம பெரியன் எழுத்து—

2. இந்நிலம் திருநாமத்துக் காணியும் இறையிலியுமாக கரைக்கொண்டு பயிர் எடுத்து திருவமுதுபடிக்குடலாக கொள்ளக்கடவதாகச் சொன்னோம். பணியால் இவை ஊர் கணக்கு பெரும்பலமருதூருடையான் திருவரங்க தேவன் எழுத்து—

3. ஊரிலே ஏற்பட்டு இறுக்கக் கடவதாகவும். இப்படி சந்திராதித்தவரையும் குடுக்கவல்ல கடவராகவும் நிச்சயித்தோம். இப்படி செய்யப்பண்ணுவதாக. ஊர்க்கணக்கு மஹா ஜனப்பிரியன் எழுத்து"—

ஊர்ச்சபை:—இத்தொடர்களை முறையே உற்று நோக்குங்கால், ஒவ்வொரு ஊர்தோறும் ஒவ்வொரு சபை இருந்ததென்பதும், அச்சபையார் பணித்தவற்றை ஊர்க்கணக்கர் நிறைவேற்றி வந்தனர் என்றும் கொள்ளக்கிடக்கின்றன.

சோழிய வன்னியன் :—"உசாத்தான கோளகுலாசனி சருப்பேதி மங்கலத்து வன்னியரில் சோழிய வன்னியன் அகம்படியர்க்கு காவல் கூலிக்கு இட்ட நிலமாய் இவனை தவிர்ந்து இன்னுயனர்க்குத் திருநாமத்துக்காணியும் இறையிலியும் ஆக"—என்னும் காலிங்கராயன் ஓலையின்படி வெட்டப்பட்டதும், மகாமண்டபத்தின் வட்புறச் சுவரில் உள்ளதுமாய் கல்வெட்டுப் பகுதியால் இவ்வுசாத்தானமான கோளகுலாசனி

சதுர்ப்பேதிமங்கலத்தில் வதிந்திருந்த வன்னியரில் சோழிய வன்னியன் என்பான் சிறப்புடன் வாழ்ந்து வந்திருந்தான் என்றும், அவன் கீழ் அகம்படியர் காவல் கூலிக்கு நிலம் பெற்றிருந்தார் என்றும் கொள்ளக் கிடக்கின்றன.

சோழ மன்னர்களுள் சிலர் பாராட்டப்பெறும் விதம்:— இக்கோயில் மகாமண்டபத்துக் கிழக்கு வாசலின் தெற்குப் புறச் சுவரில், "ஸ்வஸ்தி ஸ்ரீ புயல்வாய்த்து மண்வளரப் புலியாணையும் சக்கரமும் செயல்வாய்ப்ப மனுநூலும் செங்கோலும் திசை நடப்ப" — என்று தொடங்கும் மூன்றாம் குலோத்துங்க சோழனது மெய்க்கீர்த்தி ஒன்று இருக்கின்றது. அதன் பல பகுதிகள் புலப்படாவாறு திருப்பூமண்டபம் ஒன்றைக் கட்டியிருக்கின்றனர். அம்மன்னனுடைய மற்றொரு கல்வெட்டு, அவனை மதுரையும், ஈழமும், பாண்டியன் முடித்தலையுங்கொண்டருளிய ஸ்ரீ குலோத்துங்க சோழதேவர்—என்று குறிப்பிடுகின்றது.

மூன்றாம் இராசேந்திரன் மனுகுலமெடுத்து நெறிமுடி சூடியருளிய ஸ்ரீ ராசேந்திர தேவர் என்று பாராட்டப்படுகின்றான்.

## தேவர் அடியார்களின் பெயர்கள்

மூன்றாம் இராசேந்திர சோழ தேவரின் நான்காம் ஆட்சியாண்டில் இக்கோயிலுக்குப் பதினைந்து தேவர் அடியார்கள் இருந்தனர். அவர்களின் பெயர்கள் :—

(1) சம்பத்தான வீரபத்திர மாணிக்கம்
(2) நாச்சியான அங்க சுந்தர மாணிக்கம்
(3) துறையாண்டியான சீகரண மாணிக்கம்
(4) பெரிய நாச்சியான மருதவேதிய மாணிக்கம்

(5) நாச்சியான திருவுண்ணாழிகை மாணிக்கம்
(6) சொக்க நாச்சியான செயத்துவாச்ச மாணிக்கம்
(7) தர்மியானந்த துணை மாணிக்கம்
(8) தீநாண்ட நாச்சியான எதிரிலி சோழமாணிக்கம்
(9) நாச்சியான பிரசன்ன தேவர்மாணிக்கம்
(10) தேவியான வண்டுவார்குழலி மாணிக்கம்
(11) திருவாண்டாளான தில்லையம்பல மாணிக்கம்
(12) திருவாண்டாளான இராசமாணிக்கம்
(13) தேவியான திருச்சிற்றம்பல மாணிக்கம்
(14) பெரியபெண்டிரான தொர்மனுதேவிமாணிக்கம்

## மூன்றும் இராசேந்திர சோழ தேவரின் பிள்ளையின் பெயர்

மூன்றும் இராசேந்திர சோழ தேவரின் பிள்ளையின் பெயர் பேரியவுடையார் இராசராச தேவரான பல்லவராயர் என்பதாகும். இச்செய்தியை

ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் இராசேந்திர சோழதேவற்கு யாண்டு பதின்எழாவது இஷப நாயற்று பூர்வ பக்ஷத்துதியையும் நாயற்றுக்கிழமையும் பெற்ற பூசத்துநாள் இராசேந்திர சோழவளநாட்டுப் புறங்காம்பை நாட்டு உசாத் தானமான கேரளகுலாசனி சருப்பதி மங்கலத்து உடையார் திரு உசாத்தானமுடைய நாயனர் கோயில் .... .... என்று தொடங்கும் கல்வெட்டில் காணப்பெறும், "இன்னுயனர்க்குப் பிள்ளையான பெரியவுடையார் இராசராச தேவரான பல்லவ ராயர் கண்ட இராசராசதேவன் சந்திக்கு" என்னும் வரிகள் உணர்த்தும்.

## அளிக்கப்பெற்ற நிவந்தங்கள்

விக்கிரம சோழன்: விக்கிரமசோழ தேவரின் ஐந்தாம் ஆட்சியாண்டில் இளங்கரயுடையார் முனையதரையர் விக்கிரம சோழ நல்லூரிலும், புரவுவரியார் சீகரண நல்லூரிலும், திருவு சாத்தான முடைய நாயனார்க்குத் திருநாமத்துக்காணியாக நிலங்கொடுத்துள்ளனர்.

குலோத்துங்கன் III: மூன்றாங் குலோத்துங்கனின் இருபத்து நான்காம் ஆண்டில் புதுப்பட்டணத்து இருந்தவீதி விடங்கப் பெருமாளான உவயராமன், இக்கோயிலில் சந்தி விளக்கு ஒன்று வைப்பதற்கு ஐந்நூறு காசை ஸ்ரீ பண்டாரத்தில் ஒடுக்கியுள்ளான். இம்மன்னனது இருபத்தைந்தாம் ஆட்சியாண்டில் இராசேந்திர சோழவளநாட்டு, இடைகழ நாட்டுச் செல்கலூருடையான், இவ்வுசாத்தான முடையார்க்கு நிபந்தம் அளித்த செய்தி புலப்படுகிறது. நிபந்தம் விளங்காதவாறு கல்வெட்டுக்கள் சிதைந்து விட்டன. இக் கல்வெட்டில் கண்ட இடைகழநாட்டை, இடையளநாடு என்று கொள்ளுதல் வேண்டும்.

இராஜராஜன் III: பைய்யூர் நாட்டுப் பைய்யுழான் பிச்சன் பல்லவராயனான சோழிய அரையன், இக்கோயிலில் ஆசிரியலிங்கமாக எழுந்தருளுவித்த பல்லவனீஸ்வரமுடைய நாயனார்க்குத் திருவமுதுபடிக்கும் பூசைக்கும் ஆக இரண்டுமாவின் கீழரையே மூன்று மா நிலத்தை, இராசராச தேவரின் எட்டாம் ஆட்சியாண்டில் கொடுத்துள்ளான். உசாத்தானமான கோள குலாசனி சதுர்ப்பேதி மங்கலத்துக் கூட்டப் பெருமக்கள், உசாத்தானமுடையார்க்கு ஊர் கீழ் இறையிலியான நிலத்துக்கு அந்தராயம், கோயிற்றப்பபேறு, நீனைப்பிட்டு, தண்டு, குடிமை, காசு உள்ளிட்டவைகளை, இம் மன்ன

னின் பத்தாம் ஆட்சியாண்டில், திருப்பணிக்கு உடலாகக் கொடுத்துள்ளனர். (உடலாக=மூலதனமாக). இவ்வரசனது இதே ஆண்டில், இக்கோயில் திருநடை மாளிகையில் வடபாரிசத்தில் எழுந்தருளியிருக்கிற சூரியதேவர்க்கு அமுதுபடி விஞ்சனங்கள் உள்ளிட்டவைகளுக்கு உடலாக கொம்மடிச் செய் என்று பேர் கூவப்பட்ட நிலத்துக்கு மேற்கும், தென்பாற்கெல்லை புற்றிடங்கொண்ட பேரையன் நிலத்துக்கு வடக்கும், மேல்பாற்கெல்லை சாலியப் பேரைய நிலத்துக்குக் கிழக்கும், வடபாற்கெல்லை இறையிலி நிலத்துக்கும் ஆக இசைந்த பெரு நான்கெல்லையுள் நடுவுட்பட்ட மிகுதிக் குறை உள்ளடங்க இருமாவரை நிலத்தை, உம்பர் நாட்டு மேலைவகை வரப்பட்ட நகரம், விக்கிரமாபரண புரத்து நகரத்தார் அளித்துள்ளனர். கன்றுப்புடையார் தென்னாட்டரையர் இக்கோயிலில் மேலைத்திருநடை மாளிகையில் எழுந்தருளுவித்த சுப்பிரமணியப் பிள்ளையார்க்குத் திருவமுதுபடிக்கு, இந்த இராசராசதேவரின் இருபத்தொன்பதின் எதிராம் ஆண்டு அதவாது முப்பதாவது ஆட்சியாண்டில் நிலம் விட்டனர். இவ் வேந்தனது முப்பத்தொன்றும் ஆட்சியாண்டில், இக் கோயிலில் எழுந்தருளியிருக்கிற சூரியதேவர்க்கு உம்பர்நாட்டு மேலைவகை பாயட்ட நகரம் பராந்தக புரத்து நகரத்தார் அமுதுபடி விஞ்சனங்கள் உள்ளிட்டவைகளுக்கு உடலாக, மடையப்பன் என்று பேர் கூவப்பட்ட நிலத்தை இறையிலியாக இட்டுள்ளனர். பாண்டிகுலாசனி வளநாட்டு சிற்றூர்க்காடு கிழான் அரையன் நாடுடையான் விழுப்பரையராஜன் இவ்வுசாத்தானமுடையார்க்கு, உச்சிச் சந்தியில் நாடுடையராஜனான விழுப்பராஜர் பெயரால் மந்தா போனகம் அமுது செய்தறக்கடவதாக ஊரின்கீழ் ஒருவேலி நிலத்தை இந்த இராசராச தேவரின் முப்பத்தேழாம் ஆண்டில் வழங்கியுள்ளனர்.

இராசேந்திரன் III: இவ்வுசாத்தானமுடைய நாயனுர் கோயில் மேலைத் திருநடை மாளிகையில் களரிக்குடையான் பொன்னம்பலக் கூத்தனுன இருமுடி சோழபல்லவராயர் எழுந்தருளுவித்த புவனபதிநாச்சியார் திருமுன்பு இக்கோயில் தேவர் அடியாரில் சம்பத்தான வீரபத்திரமாணிக்கம் உள்ளிட்டார் பங்கு இரண்டிற்கு விளக்கு ஒன்றாக வைக்கக் கடவதாக இக்கோயில் ஆதிசண்டேஸ்வர தேவகன்மிகளுக்கு, இராசேந்திர சோழ தேவரின் நான்காம் ஆட்சியாண்டில் இசைவு தீட்டுக் கொடுத்துள்ளனர். இவ்வேந்தனது இதே ஆண்டில், மேற்குறித்த புவனபதி நாச்சியார்க்கு பூசைக்கும் திருப்பணிக்கும் உடலாக இராசேந்திர சோழபுரத்தில் சேதிராயர் பாரியைப் பட்டாண்டாள், ஒன்பது மா நிலத்தை அளித்துள்ளனர். இவ்வுசாத்தான முடைய நாயனுர் கோயில் திருப்பணி செய்வித்த ஆண்டார் பிரசன்ன தேவர்க்கு மடசேஷமாகப் பன்னிரண்டாந்தரத்து இறுப்பாக இட்ட ஊரில், தென்மருங்கு மதுராந்தகப் பேரேரிக்கு வடக்கு, தருமி வாய்க்காலுக்குக் கிழக்கு, பெருவழிக்குத் தெற்கு, இராசேந்திர சோழபுரத்து விக்கிரம சோழ மூவேந்த வேளார் நிலத்துக்கு மேற்கு, முப்பத்தெட்டாவது அளவுப்படி நிலம், இரண்டு மாகாணி கீழரையே மூன்று மா முக்காணியும் ஐந்தாவது நாளிலே திருநாமத்துக் காணியாகப் புகுந்தமையால், அந்த நிலத்தை, இந்நாயனுர் கோயில் திருநடை மாளிகையில் எழுந்தருளியிருந்து பூசை கொண்டருளுகிற திருஞான சம்பந்த நாயனுர்க்கும், திருநாவுக்கரசு நாயனுர்க்கும், சுந்தரமூர்த்தி நாயனுர்க்கும் திருவமுதுபடிக்கு உடலாக, உசாத்தானமான சோளகுலாசனி சதுர்வேதி மங்கலத்துப் பெருங்குறி மகாசபையார், இவ்வரசனது பத்தாம் ஆட்சியாண்டில் இறையிலி பண்ணிக் கொடுத்தனர்.

இம்மன்னனது பதினொன்றும் ஆட்சியாண்டில், பைய்யு ழான் பெரியான் அழகிய பெருமாளான சோழகங்கன், இங் குத்தைப் படைப்பற்றுன ஊர்களின் சண்டன்கரம்பையில், பத்துமா அரைக்காணி முந்திரிகை நிலத்தை உசாத்தான முடையார்க்குத் திருநாமத்துக்காணியும் இறைபிலியுமாகக் கொடுத்துள்ளனர்.

மேற்குறித்த பைய்யூழான் பெரியான் அழகிய பெருமா ளான சோழகங்கன் இவ்வுசாத்தானமுடையார் கோயில் திரு வைகாசித் திருநாளில், தான் எழுந்தருளுவித்து வந்த திருக் காப்புநாளும், திருவெழுச்சியும், திருஅரைப்புறமும், ஆய இந்நாட்களில் அமுதுபடிக்கும் கறியமுதுள்ளிட்ட விஞ்சனத் துக்கும் திருமேற் பூச்சுத் திருச்சாந்துள்ளிட்டனவையிற்றுக் கும், திருப்பள்ளித்தாமம், திருவிளக்கெண்ணெய் இவைகளுக் கும் உடலாகத் தன் காணியான சாக்கானமான கேரளகுலா சனி சதுர்ப்பேதி மங்கலத்துப் பிடாகை நம்பன் குறிச்சியில் செந்திவயக்கல் என்று பேர் கூவப்பட்ட நிலத்தையும், இராச கெம்பீர வேளான் காணிப்பற்றுக்குத் தெற்கும் நடுவுபட்ட நிலம் சின்னமும் ஆக, நிலம் சின்னம் மிகுதிக் குறைவு உள் பட்ட நிலத்தையும், இவ்வரசனது பதினொன்றும் ஆண்டு முதல் இத்திருநாள்களுக்கு உடலாகத் திருநாமத்துக் காணி யும் இறையிலியுமாக அளித்துள்ளான்.

(திருநாமத்துக்காணி = சிவபெருமானுக்குரிய நிலம்
இறையிலி = வரியில்லாமல்
உடலாக = மூலதனமாக. சின்னம்—Fraction).

சொக்கநாயகனை இராச கம்பீர சோழிய அரையன் உசாத்தானமான கேரளகுலாசனி சதுர்ப்பேதி மங்கலத்துப் பிடாகை நம்பன் குறிச்சியில் இரண்டு மா நிலத்தைத் திருக்கை கொட்டிப்புறமாக வழங்கியிருந்தான். அவனே இவ்வுசாத்

தானமுடைய நாயனார்க்கு நாடுடைய நாயகன் சந்தி என்று அமுதுசெய்தருளுகிற சந்திக்கு அமுதுபடிக்கும் விஞ்சனத்துக்கும் உடலாக நம்பன் குறிச்சியில் மாகாணி முந்திரிகைக் கீழரை நிலத்தை, இந்த இராசேந்திரசோழ தேவர் காலத்தில் கொடுத்துள்ளான். பைய்யுழான் பல்லவராயன் வாணராயனை சோழிய அரையன் இந்நாயனார் கோயில் மேலைத் திருநடை மாளிகையில் எழுந்தருளுவித்த பல்லவன் மாதேவீஸ்வரமுடைய நாயனார்க்குத் திருப்படிமாற்றுக்கும் கறியமுது உள்ளிட்ட விஞ்சனங்களுக்குமாக இவ்வூர்ப் பிடாகை நம்பன் குறிச்சியில் திருநாமத்துக்காணி இறையிலியாக நிலம் கொடுத்துள்ளான். மேற்குறித்த பல்லவராயன் இவ்வுசாத்தானமுடையார் திருமடை விளாகத்து வடக்கில் திருவீதியில் வாணராயர் மடத்துக்கு மடப்புற இறையிலியாக நம்பன் குறிச்சியில் ஒரு மாமுக்காணி அரைக்காணி கீழரையே இரண்டு மாவை, இவ்வேந்தன் காலத்தில் தந்துள்ளான். (மடப்புற இறையிலியாக = வரியில்லாமல், மடத்துக்கு நிவந்தமாக).

செம்பங்குடையான் திருச்சிற்றம்பலமுடையான் கூத்தாடு நாயனார், இக்கோயிலில் எழுந்தருளுவித்த திருஞானம் பெற்ற பிள்ளையார்க்கு திருநாள் அழிவுகளுக்கும், அமுதுபடி, சாத்துபடி, கறியமுது, விஞ்சனம் உள்ளிட்டவைகளுக்கும் ஆக, கேரளகுலாசனி சதுர்ப்பேதி மங்கலத்துப் பெருங்குறி மகாசபையார் ஆதிசண்டேஸ்வர தேவகன்மிகளுக்கு இறையிலியாகக் கொடுத்துள்ளனர். (திருநாள் அழிவு = திருநாட் செலவு).

இந்த இராசேந்திர சோழன் காலத்தில், பெருந்தொண்டை மண்டலத்து வெள்ளூர் வேளுழான் ஆதித்த தேவன், இவ்வுசாத்தானமுடையார் கோயிலிலே, ஸ்ரீ

மாஹேஸ்வரருக்கு நாள் ஒன்றுக்கு ஒரு ஓடு கொடுக்குமாறு நிபந்தம் அளித்திருந்தான். இவ்வேந்தனது பதினேழாம் ஆட்சியாண்டில் பொறிக்கப் பெற்றதும், முதல் திருச்சுற்றுலையைச் சேர்ந்த கோபுரத்தின் அடிப்பாகத்தில் தென்புறமாக இருக்கும் கல்வெட்டு, வேளுழான் ஆதித்த தேவர், திருவுசாத்தான முடையார்க்குத் திருப்பள்ளித்தாமம் சாத்தியருள திருநந்தவனத்து நிபந்தம் விட்டிருந்த செய்தியைக் குறிப்பிடுகின்றது.

இதே ஆண்டில், இம்மன்னனது மகனுகிய பெரியலுடையார் இராசராச தேவரான பல்லவராயர் கண்ட இராசராச தேவன் சந்திக்கு அமுதுபடி சாத்துபடி உள்ளிட்டவைகளுக்கு, சேரளகுலாசனி சதுர்ப்பேதி மங்கலத்துப் பெருங்குறி மகா சபையார் இறையிலியாக நிலம் கொடுத்துள்ளனர்.

பாண்டியன்: முதல் கோபுரத்தின் வாசலடியில் தென் பக்கமாயுள்ளதும், மிகவும் சிதைந்ததுமான, பெருமாள் சுந்தர பாண்டியர் கல்வெட்டு, இறைவன் பவனி வருதற்குரிய திருவீதியைப்பற்றிக் குறிப்பிடுகின்றது.

அர்த்தமண்டபத்தின் மேற்குப் பக்கங்களில் உள்ள கல்வெட்டுக்கள் திருவிளக்குப் புறங்களுக்குரிய நிலங்களைப் பற்றி மிகவும் விரிவாகக் கூறுகின்றன.

இவைகளேயன்றி, திருப்பள்ளியெழுச்சி, அமாவாசிப் புறம் இவைகளுக்கும் நிலங்கள் விடப்பெற்றிருந்தன.

---

## சேர்க்கை

இக்கோயில் கல்வெட்டுக்களின் மூலங்கள் (Texts) எவ்வாறு இருக்கும் என்று எண்ணுவார்க்குப் பயன்படுமாறு, சிலவற்றைக் கீழே குறித்துள்ளேன். இவை தென் இந்தியக் கல்வெட்டுத் தொகுதிகளில் இதுகாறும் வெளிவராதனவாம்.

## இராசேந்திரசோழ தேவர்

### கல்வெட்டு I

ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவற்கு யாண்டு பன்னிரண்டாவதின் எதிராமாண்டு இராசேந்திரசோழ வளநாட்டு புறங்கரம்பை நாட்டு உசாத்தானமான கேரள குலாசனிச் சதுர்ப்பேதிமங்கலத்து உடைய திருவுசாத்தானமுடையார் தேவதானத்து ஊர் குடி மக்களும், இன்னாயனார் தேவதானத்துக்கு வெள்ளாழ்மை செய்து இருக்குமாண்டார்களும் இவ்வனைவோம். தொண்டை மண்டலத்து ஆதிச்ச தேவற்கு நாங்கள் இசைவு தீட்டு கொடுத்த பரிசாவது. இந்நாயனார் தேவதானம் ஊர் கீழ் இறையிலியாய் இவர் குடிநீங்காத் தேவதானமாக சண்டேசுரப் பெருவிலைகொண்டு திருமுன்னொடுக்குப் புறமாக இவரிட்ட இசைவு தீட்டு பெருமான் வயக்கலுக்கு, பிள்ளையாக பாலுடையேறுகையில் .........ர் செய்தந நமதுக்கு சாங்கிவரிப்படியே ஆட்டைக்கு ஓராள் ஏறி இதுக்கு செயிது குடுக்கக்கடவோமாகவும். இப்படி சந்திராதித்த வரையும் நாங்கள் செய்யக் கடவோமாகவும். இப்படி கல் வெட்டிக் கொள்ளக் கடவதாகவும். இப்படி சம்மதித்து இசைவு தீட்டுக் குடுத்தோம் ஆதிச்ச தேவற்கு இவ்வனைவோம்.

### கல்வெட்டு II

ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் இராசேந்திர சோழ தேவர்க்கு யாண்டு—மீன நாயற்று பூர்வ பக்ஷத்து

தசமியும் செவ்வாய்க்கிழமையும் பெற்ற புனர்பூசத்து நாள் இராசேந்திரசோழ வளநாட்டு புறங்கரம்பை நாட்டு பிர்ம தேசம் சாக்கானமான கேரளகுலாசனி சதுர்ப்பேதிமங்கலத்து உடையார் ஆதிசண்டேசுவர தேவகன்மிகளோம். பாண்டி குலாசனி வளநாட்டு கூற்றத்து களரிக்குடையான் அரையன் பொன்னம்பல கூத்தனான இருமுடிசோழ ப..........பரிசாவது இந்நாயனார் கோயில் மேலைத் திருநடை மாளிகையில் இவர் எழுந்தருளுவித்த......நாச்சியார்க்கு அமுதுபடிக்கு இவ்வூர் உடையார் தந்த காசு மூவாயிரமும், வடக்கில் திருநடை மாளிகையிலே திருப்பணி செய்யவந்த கல்லுக்கு விலைப்படி காசுக்கு உடலாக திருக்கொடுங்குன்றவயிராகியும் கோவாண்டானும் உள் இட்டற்கு வாங்கி குடுத்தமையில் இக்காசு மூவாயிரமும் இந்நாயனார் தேவதான குட்டி மக்கள் குடிவர்க்க உபயமாக வேலிக்கு தூணியாக வந்த நெல்லு வைத்து இவர்கள் ஸ்தாபனம் பண்ணுகையில் சிபண்டாரத்திலே கூட்டிக் கொண்டு இந்நாள் முதல் நாள் ஒன்றுக்கு நானாழியாக வந்த அரிசி பலகையிலே அளக்கவும். கறியமுது விஞ்சனங்கள் உள்ளிட்ட யிவையிற்றுக்கும், திருவிளக்கு இரண்டுக்கும் வேண்டுங் காசும் பண்டாரத்திலே இட்டு பூசையில் தாழ்வு வாாமல் சந்திராதித்த வரையும் செல்லவும் : இக்காசு மூவாயிரமும் வேலி தூணியாக வந்த நெல்லும் கொண்டு இப்படி பூசை செலுத்தகடவோமாக சம்மதித்து இசைவு திட்டு குடுத்தோம். உடையார் கோவில் தானத்தோம். பொன்னம்பலக் கூத்தனான இருமுடிசோழ பல்லவரையர்க்கு. இக்காசு மூவாயிரமும் தேவதானத்து குடிமக்கள் குடிவாரத்து வேலியால் நெல்லு தூணியுங்கொண்டு நாள் ஒன்றுக்கு நானாழி அரிசி திருவமுதும் இரண்டு திருவிளக்கும் இட்டு, இப்பூசை செய்வதாக கல்வெட்டுக் குடு......செய்ய இக்கோயில் சிப்பாசாரியக்

காணி உடைய விடங்கன்னுன வளவடுொங்கசாரியனென் இவை என் எழுத்து.

## இராசராச தேவர்

### கல்வெட்டு I

திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீராஜராஜ தேவற்கு யாண்டு ௰-ஆவது உசாத்தானமான கேரள குலாசனி சதுர் வேதி மங்கலத்து கூட்டப் பெருமக்கள் எழுத்து நம்மூர் கணக்கு சாக்கானமுடையான் உத்தமபிரியன் கண்டு நம்மூர் உடையார் திருவுசாத்தானமுடையனுயனுர்க்கு பத்தாவது வரையும் ஊர் கிழ் இறையிலியான நிலத்துக்கு அந்தராயம், கோயிற்றம்பபேறு, நனைப்பிட்டு, தண்டு, குடிமை, காசு உள்ளட்வற்களும் இந் நாயனுர் திருப்பணிக்கு உடலாக சந்திராதித்த வரையும் குடுத்தோம். இப்படியால் வந்த ஊர் ஒன்ருன புக்கிலே விழுக்காடு இட்டுக்கொள்ள பண்ணுவதே. இப்படியால் வந்தன சந்திராதித்த வரையும் தவிந்தோம். பணியால் ஊர்க் கணக்கு சாக்கானமுடையான் உத்தமப்பிரிய னெழுத்து.

### கல்வெட்டு II

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் இராசராச தேவர்க்கு யாண்டு ௰௧ உம்பர்நாட்டு மேலவகை வரப்பட்ட நகரம் விக்கிரமாபரண புரத்து நகரத்தோம் ஊர் கணக்கு தும்பூருடையான்கண்டு புறங்கரம்பை நாட்டு உசாத்தானமான கேரளகுலாசனி சதுர்வேதி மங்கலத்து உடையார் திருவுசாத்தானமுடையார் கோயில் கீழைத் திருநடை மாளிகை வடபாரிசத்து எழுந்தருளியிருக்கிற சூரியதேவற்கு அமுதுபடி விஞ்சனங்கள் உள்ளிட்டவையிற்றுக்கு உடலாக இறையிலியாக இட்ட கொம்மடிச் செய் என்று பேர் கூவப்பட்ட நிலத்துக்கு கிழ்பாற்கெல்லை பெரிய கோயில் நம்பி நிலத்துக்கு மேற்

கும் தென்பாற்கெல்லை புற்றிடங்கொண்ட பேரையன் நிலத்துக்கு வடக்கும் மே[illegible]கெல்லை சாலிப்பெரைய நிலத்துக்கு கிழக்கும் வடபாற்கெல்லை இறையிலி நிலத்துக்கும் ஆக இசைந்த [illegible]கெல்லை நடுவுட்பட்ட மிகுதிக்குறை உள் அடங்க நிலம் இரு[illegible]வரை. இந் நிலம் இருமாவரையும் இ[illegible]ள்ளில் அமுதுபடி விஞ்சனங்களுக்கு உடலாக திருநாமத்துக்காணியும் இறையிலியுமாக குடுத்தோம். இந்நாள் முதல் இந் நிலத்தால் உள்ள கடமை குடிமையும் இறையிலி விநியோகங்களும் உள்பட ஊரிலே எறட்டு இறுக்கக் கடவோமாகவும். இந்நிலம் இருமாவரையும் சந்திராதித்த வரையும் திருநாமத்துக் காணியும் இறையிலியுமாகக் கடவதாகவும். இவ்வூர் நகரத்தோம். இப்படிக்கு இவை நகரக் கணக்கு தும்பூருடையான் எழுத்து.



## விக்கிரம சோழ தேவர்

(இவரது கல்வெட்டில் சிலவரிகள்)

அறவோலைப்படி. திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரம சோழதேவற்கு யாண்டு ரு-வது ராசேந்திர சோழ வளநாட்டு புறங்கரப்பை நாட்டு கேரள குலாசனி சதுர்ப்பேதி மங்கலத்து நிலத்து இந்நாயனர் தேவதான இறையிலியாக இளங்காயுடையார் முனையதரையர் விண்ணப்பஞ் செய்து, திருநாமத்துக்காணியாக வைத்த விக்கிரம சோழ சதுர்வேதி மங்கலத்து இடுவித்த விக்கிரமசோழ நல்லூர் ரு (நிலம்) ௰ சு ௨ -ம் புரவுவரியார் இடுவித்த இந்நாயனர்க்கு திருநாமத்துக் காணியாய் காசுகொள்ளா இறையிலியாக சீகரண நல்லூர் என்று இடுவித்த ரு௨ வேலி மூன்பு உடையார் பழம் பியறையும் தவிர்த்து இந்நாயனர் திருநாமத்துக் காணியாக இடுவித்த நிலத்துக்கும் பிடிபாடாக இவோலை செய்த பரிசாவது ........

## சகலகலாவல்லி மாலை

வெண்டா மரைக்கன்றி நின்பதந் தாங்கவென் வெள்ளையுள்ளத்
தண்டா மரைக்குத் தகாதுகொ லோசக மேழுமளித்
துண்டா னுறங்க வொழித்தான்பித் தாகவுண் டாகும்வண்ணம்
கண்டான் சுவைகொள் கரும்பே சகல கலாவல்லியே. 1

நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்
பாடும் பணியிற் பணித்தருள் வாய்பங்க யாசனத்திற்
கூடும் பசும்பொற் கொடியே கனதனக் குன்றுமைம்பாற்
காடுஞ் சுமக்குங் கரும்பே சகலகலாவல்லியே. 2

அளிக்குஞ் செழுந்தமிழ்த் தெள்ளமு தார்ந்துன் னருட்கடலிற்
குளிக்கும் படிக்கென்று கூடுங்கொ லோவுளங் கொண்டுதெள்ளித்
தெளிக்கும் பனுவற் புலவோர் கவிமழை சிந்தக்கண்டு
களிக்குங் கலாப மயிலே சகல கலாவல்லியே. 3

தூக்கும் பனுவற் றுறைதோய்ந்த கல்வியுஞ் சொற்சுவைதோய்
வாக்கும் பெருகப் பணித்தருள் வாய்வட நூற்கடலும்
தேக்குஞ் செழுந்தமிழ்ச் செல்வமுந் தொண்டர்செந் நாவினின்று
காக்குங் கருணைக் கடலே சகல கலாவல்லியே. 4

பஞ்சப் பிதந்தரு செய்யபொற் பாதபங் கேருகமென்
நெஞ்சத் தடத்தல ராததென் னேநெடுந் தாட்கமலத்
தஞ்சத் துவச முயர்த்தோன்செந் நாவு மகமும்வெள்ளைக்
கஞ்சத் தவிசொத் திருந்தாய் சகல கலாவல்லியே. 5

பண்ணும் பரதமுங் கல்வியுந் தீஞ்சொற் பனுவலும்யான்
எண்ணும் பொழுதெளி தெய்தநல் காயெழு தாமறையும்
விண்ணும் புவியும் புனலுங் கனலும்வெங் காலுமன்பர்
கண்ணுங் கருத்து நிறைந்தாய் சகல கலாவல்லியே. 6

பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனுமென்பாற்
கூட்டும் படிநின் கடைக்கணல் காயுளங் கொண்டுதொண்டர்
தீட்டுங் கலைத்தமிழ்த் தீம்பா லமுதந் தெளிக்கும்வண்ணம்
காட்டும்வெள் ளோதிமப் பேடே சகல கலாவல்லியே 7

சொல்விற் பனமு மவதான முங்கவி சொல்லவல்ல
நல்வித்தை யுந்தந் தடிமைகொள் வாய்நளி னாசனஞ்சேர்
செல்விக் கரிதென் றொருகால முஞ்சிதை யாமைநல்கும்
கல்விப் பெருஞ்செல்வப் பேறே சகல கலாவல்லியே. 8

சொற்கும் பொருட்கு முயிராமெய்ஞ் ஞானத்தின் றோற்றமென்ன
நிற்கின்ற நின்னை நினைப்பவர் யார்நிலந் தோய்புழைக்கை
நற்குஞ் சரத்தின் பிடியோ டரசன்ன நாணநடை
கற்கும் பதாம்புயத் தாயே சகல கலாவல்லியே. 9

மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னருமென்
பண்கண் டளவிற் பணியச்செய் வாய்படைப் போன்முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடியுண் டேனும் விளம்பிலுன்போற்
கண்கண்ட தெய்வ முளதோ சகல கலாவல்லியே. 10

உ

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் ... | 6 | 0 | 0 |
| 2. | மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் ,, ... | 1 | 0 | 0 |
| 3. | முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் ,, ... | 1 | 0 | 0 |
| 4. | சிதம்பர செய்யுட் கோவை ,, ... | 6 | 12 | 0 |
| 5. | கந்தர் கலிவெண்பா ஆங்கிலம், ஹிந்தி மொழிபெயர்ப்புக்களுடன் ... | 0 | 6 | 0 |
| 6. | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் ... | 0 | 4 | 0 |
| 7. | அபிராமி அந்தாதி கி. வா. ஜ. குறிப்புரையுடன் | 0 | 12 | 0 |
| 8. | சிவஞான சித்தியார் ஆங்கிலம், ஹிந்தி மொழிபெயர்ப்புக்களுடன் ... | 5 | 0 | 0 |
| 9. | கந்தர் கலிவெண்பா திரு. பட்டுச்சாமி ஓதுவார் உரையுடன் ... | 0 | 6 | 0 |
| 10. | ஒன்பதாம் திருமுறை - திருவிசைப்பா திருப் பல்லாண்டு ... | 0 | 9 | 0 |
| 11. | சுந்தரர் தேவாரம் ... | 1 | 0 | 0 |
| 12. | திருநாவுக்கரசர் தேவாரம் ... | 1 | 0 | 0 |
| 13. | திருவாசகம் ... | 0 | 4 | 0 |
| 14. | அம்மையார் அற்புதத் திருவந்தாதி ... | 0 | 4 | 0 |
| 15. | முது மொழி மேல் வைப்பு ... | 0 | 12 | 0 |
| 16. | திருஞான சம்பந்தர் தேவாரம் அச்சில் | | | |
| 17. | பதினோராந் திருமுறை ,, | | | |



கிடைக்குமிடம்:—

**திரு. T.M. குமரகுருபரன்பிள்ளை அவர்கள் B.A., B.L.**

வக்கீல்,

மானேஜிங் டிரஸ்டீ, ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் மடம்,

ஸ்ரீவைகுண்டம் (திருநெல்வேலி).

ஸ்ரீவித்யா பிரஸ், கும்பகோணம்